# (53) நாட்டியம் (பரதம்)

## வினாத்தாள் கட்டமைப்பு

**வினாத்தாள் I -** **நேரம் : 02 மணித்தியாலங்கள்.**
**5** தேர்வுகள் கொண்ட **50** பல்தேர்வு வினாக்களைக் கொண்டது. எல்லா வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும். ஒரு வினாவிற்கு **01** புள்ளி வீதம் மொத்தப் புள்ளிகள் **50** ஆகும்.

**வினாத்தாள் II -** **நேரம் 03 மணித்தியாலங்கள்.** (மேலதிக வாசிப்பு நேரம் 10 நிமிடங்கள்)
இவ்வினாத்தாள் கட்டுரை அமைப்பு, கட்டுரை வகை என **இரண்டு** பகுதிகளைக் கொண்டது.

பகுதி I
**மூன்று** கட்டமைப்பு வினாக்கள், **முதலாவது கட்டாய வினாவாகவும்,** இது தவிர வேறு **ஒரு** வினாவுக்குமாக விடை எழுத வேண்டும்.
ஒவ்வொரு வினாவிற்கும் **20** புள்ளிகள் வீதம் **40** புள்ளிகள் வழங்கப்படும்.

பகுதி II
**ஐந்து** கட்டுரை வினாக்கள். எவையேனும் **மூன்று** வினாக்களுக்கு விடை எழுத வேண்டும்.
ஒவ்வொரு வினாவிற்கும் **20** புள்ளிகள் வீதம் **60** புள்ளிகள் வழங்கப்படும்.
வினாத்தாள் II இற்கு மொத்தப் புள்ளிகள் **100** ஆகும்.

**செய்முறைப் பரீட்சை**
வினாத்தாள் III இற்கு மொத்தப் புள்ளிகள் 100

இறுதிப் புள்ளியைக் கணித்தல் :

| | | |
|---|---|---|
| வினாத்தாள் I | = 50 × 2 | = 100 |
| வினாத்தாள் II | | = 100 |
| வினாத்தாள் III செய்முறைக்குரிய இறுதிப்புள்ளிகள் | = 100 × 2 | = 200 |
| இறுதிப் புள்ளி | = 400 ÷ 4 | = 100 |

## வினாத்தாள் I

**அறிவுறுத்தல்கள் :**
* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* பொருத்தமான விடையைத் தெரிவு செய்க. பல்தேர்வு வினாக்களுக்கு விடையளிப்பதற்குரிய தாள் வழங்கப்படும்.

---

**1.** தேவ ஹஸ்தத்தில் கணபதிக்குரிய ஸ்தானமாக அமைவது
(1) வயிற்றின் அருகில் இடக்கை கபித்தமும், தலைக்கு மேல் வலக்கை கடகா முகமும் பிடித்தல்.
(2) வலக்கை காதின் அருகில் அர்த்த சந்திரனும், இடக்கை மார்பின் முன்நோக்கி சிம்ம முகமும் பிடித்தல்.
(3) மார்பின் முன் வலக்கை கபித்தமும், இடக்கை அலபத்மமும் பிடித்தல்.
(4) தோளின் மேல் வலக்கை கத்தரிமுகமும், இடக்கை கபித்தமும் பிடித்தல்.
(5) இரண்டு கைகளிலும் கபித்தம் பிடித்து வயிற்றின் முன் மேலும், கீழுமாகப் பிடித்தல்.

**2.** ஆங்கிக அபிநயத்தில் தலையாலும், கண்களாலும் பாவங்களைக் காட்டும் அபிநயம்
(1) சூசிகா அபிநயம் (2) தொந்தாபிநயம் (3) பாவாபிநயம்
(4) இலட்சணிகாபிநயம் (5) உபாங்கினி அபிநயம்

**3.** மெய்யடவுகளுக்கு அதிகளவு முக்கியத்துவம் கொடுத்து ஆடப்படும் உருப்படி

(1) அலாரிப்பு (2) தோடய மங்களம் (3) சப்தம்

(4) தில்லானா (5) கவுத்துவம்

**4.** அபிநயதர்ப்பணம் என்னும் நூலினை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்

(1) கலாநிதி ஆனந்த குமாரசுவாமி (2) சுவாமி விபுலானந்த அடிகள்

(3) சேர் பொன். இராமநாதன் (4) ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர்

(5) சோமசுந்தரப் புலவர்

**5.** சித்தேந்திர யோகியினால் உருவாக்கப்பட்டுப் பின்னர் அந்தணர்களால் வளர்க்கப்பட்ட சாஸ்திரீய நடனம்

(1) மணிப்புரி (2) ஒடிசி (3) கதகளி (4) கதக் (5) குச்சிப்புடி

**6.** கற்றறிந்தோர் இருக்கும் அவையில் ஆடப்படும் கூத்து

(1) தைநீராடல் (2) குரவை (3) வேத்தியல் (4) துணங்கை (5) பொதுவியல்

**7.** 'பிராணிமித்ரா' என்ற பட்டத்தினைப் பெற்றவர்

(1) திருமதி. பாலசரஸ்வதி (2) திருமதி. ருக்மணி அருண்டேல்

(3) திருமதி. மைலாப்பூர் கௌரியம்மாள் (4) திரு. ஈ. கிருஷ்ண ஐயர்

(5) பந்தணை நல்லூர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை

**8.** மிஸ்ர அலாரிப்பில் இடம்பெறும் தாரிதகிணஜெம்,; ததரிதகிணஜெம்,; இப்பகுதியில் இடம்பெறும் மாத்திரைகளின் எண்ணிக்கை

(1) 18 (2) 20 (3) 10 (4) 22 (5) 30

**9.** நவரஸங்களில் அற்புத ரஸத்திற்குரிய நிறம்

(1) கறுப்பு (2) வெள்ளை (3) நீலம் (4) மஞ்சள் (5) சிவப்பு

**10.** 'சௌட்டிக்காரன்' என ஒப்பனைக்காரரை அழைக்கும் சாஸ்திரீய நடனம்

(1) குச்சிப்புடி (2) கதக் (3) ஒடிசி (4) மணிப்புரி (5) கதகளி

**11.** அபிநய அரசி பாலசரஸ்வதியின் அரங்கேற்றம் நிகழ்ந்த இடம்

(1) தஞ்சைப் பெருங்கோவில் (2) காஞ்சி காமாட்சி அம்மன் கோவில்

(3) கங்கைகொண்ட சோழேச்சரம் (4) காசி கைலாசநாதர் கோவில்

(5) மதுரை மீனாட்சி அம்மன் கோவில்

**12.** ஸ்தாயி பாவம் உருவாகும் முறை

(1) வியப்பிசாரிபாவம், விபாவம், அனுபாவம், ஸ்தாயிபாவம்

(2) அனுபாவம், விபாவம், வியப்பிசாரிபாவம், ஸ்தாயிபாவம்

(3) விபாவம், அனுபாவம், வியப்பிசாரிபாவம், ஸ்தாயிபாவம்

(4) ஸ்தாயிபாவம், வியப்பிசாரிபாவம், விபாவம், அனுபாவம்

(5) அனுபாவம், வியப்பிசாரிபாவம், விபாவம், ஸ்தாயிபாவம்

**13.** தஞ்சை சகோதரர்களுக்கு அவர்களின் குரு முத்துஸ்வாமி தீட்சிதரால் வழங்கப்பட்ட பட்டம்

(1) சங்கீத சாகித்திய பரத சிரேஷ்டர் (2) சங்கீத வித்துவான்

(3) கலாவித்தகர் (4) கலாபூஷணம்

(5) சங்கீத மேதை

**14.** சிவபெருமான் தண்டு முனிவருக்கு தாண்டவத்தைப் போதிக்கும் காட்சி சித்திரிக்கப்பட்டுள்ள இடம்

(1) தஞ்சைப் பெருங்கோயில் (2) சிதம்பரம்
(3) காஞ்சிகைலாச நாதர் கோயில் (4) மாமல்லபுரம்
(5) கும்பகோணம் சாராங்கபாணி கோயில்

**15.** மராட்டிய மன்னர் காலத்தில் நாட்டியசாலைக்கு வழங்கப்பட்ட பெயர்

(1) நாடகசாலை (2) அரங்கம் (3) கூத்தம்பலம்
(4) நாட்டியமண்டபம் (5) சங்கீதமஹால்

**16.** கூத்தர், விறலியரின் நடனச் செய்திகள் பற்றி அறிய உதவும் காலப்பகுதி

(1) பல்லவர் காலம் (2) சங்க காலம் (3) ஆங்கிலேயர் காலம்
(4) சோழர் காலம் (5) நாயக்கர் காலம்

**17.** சதுஸ்ரஜாதி திரிபுடை தாளத்தில் 17 மாத்திரைகளைக் கழித்து அமைக்கப்படும் ததிங்கிணதொம் அமைந்துள்ள ஜாதி

(1) திஸ்ரம் (2) சதுஸ்ரம் (3) கண்டம் (4) மிஸ்ரம் (5) சங்கீர்ணம்

**18.** பீபக்ஸ ரஸத்திற்கு உரிய இராகம்

(1) கானடா (2) பேகட (3) அடானா (4) லதாங்கி (5) சாமா

**19.** தில்லானாவை ஒத்த தரண என்ற உருப்படி இடம்பெறும் சாஸ்திரிய நடனம்

(1) கதகளி (2) குச்சிப்புடி (3) ஒடிசி
(4) மோகினியாட்டம் (5) கதக்

**20.** நாயகியினுடைய சுகதுக்கங்களைத் தனக்கு ஏற்பட்டது போலவே அனுபவிப்பவள்

(1) சகி (2) தாஸி (3) சேடி (4) தாத்ரேயி (5) இலிங்கினி

**21.** உடரட்ட நடனத்திற்குப் பயன்படுத்தப்படும் தாள வாத்தியம்

(1) யக் பெரய (2) தவுல (3) கட்ட பெரய (4) றபான (5) பந்தேருவ

**22.** தீய சக்திகளை அழித்து கருணை செய்யும் தன்மையை உணர்த்தும் தாண்டவம்

(1) திரிபுர தாண்டவம் (2) ஆனந்த தாண்டவம் (3) முனி தாண்டவம்
(4) ஊர்த்துவ தாண்டவம் (5) காளிகா தாண்டவம்

**23.** வயல் சார்ந்த இடத்தில் ஆடப்படும் குரவை

(1) மருதநிலக் குரவை (2) முல்லைநிலக் குரவை (3) நெய்தல்நிலக் குரவை
(4) பாலைநிலக் குரவை (5) குன்றக் குரவை

**24.** "வருவேன் வருவேன் என்று...", "என்னமோ கனமாய் இருக்குதடி..." ஆகிய பதங்களின் சாகித்திய கர்த்தா

(1) திரு. சுப்பராமையர் (2) திரு. முத்துத்தாண்டவர்
(3) கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை (4) பிரம்மஸ்ரீ. ந. வீரமணி ஐயர்
(5) ஊத்துக்காடு வெங்கட சுப்பையர்

**25.** பல்லவர் காலத்து நடனமாதர் எவ்வாறு அழைக்கப்பட்டனர்

(1) கணிகையர் (2) கூத்தியர் (3) மாணிக்கத்தார் (4) பாடினி (5) விறலியர்

**26.** முன்னாள் இந்து சமய கலாசார அமைச்சர் மாண்புமிகு செல்லையா இராசதுரை அவர்களின் முயற்சியால் 1982 இல் ஆரம்பிக்கப்பட்ட கலை நிறுவனம்,

(1) வடஇலங்கைச் சங்கீத சபை (2) சுவாமி விபுலானந்த அழகியற் கற்கைகள் நிறுவகம்
(3) இராமநாதன் நுண்கலைக் கழகம் (4) சங்கீத வித்துவ சபை
(5) திருமறைக் கலாமன்றம்

**27.** தலையில் வலது, இடது பக்கமாக அணியப்படும் அணிகலன்கள் முறையே

(1) சந்திரபிறை, சூரியபிறை (2) சூரியபிறை, ராக்கொடி (3) சந்திரபிறை, ராக்கொடி
(4) சூரியபிறை, சந்திரபிறை (5) உச்சிவரி, சந்திரபிறை

**28.** "எட்ட நில்லுமென்று சொல்லடி ஸகியே
தொட்டணைக்கும் கந்தன் கிட்டவந்தால் - அவனை"
இப்பாடல் வரிகளில் சுட்டப்படும் நாயகி

(1) அபிசாரிகா (2) புரோஷித்தப்ரியா (3) கலகாந்தரிதா
(4) கண்டிதா (5) விப்ரலப்தா

**29.** துச்சாதனன் பாஞ்சாலியின் துகிலுரியும் சந்தர்ப்பத்தில் துரியோதனனின் சிரிப்பு

(1) அதிஹஸித்தம் (2) விஹசித்தம் (3) உபஹசித்தம் (4) அபஹஸித்தம் (5) ஹஸித்தம்

**30.** வட இலங்கைச் சங்கீத சபையின் முதலாவது தலைவர்

(1) திரு. எம்.ஐ. பரம் (2) திரு. டபிள்யூ.என். குமாரசாமி
(3) திரு. எஸ்.எஸ். அண்ணாசாமி பிள்ளை (4) திரு. டி.பி. சபேஸ் ஐயர்
(5) கலாநிதி. இயன்சண்டிமன்

**31.** யாழ்ப்பாணத்தில் சிறப்பாக ஆடப்பட்டுவரும் கூத்து

(1) காமன் கூத்து (2) அர்ச்சுனன் தபசு (3) காத்தவராயன் கூத்து
(4) பறைமேளக் கூத்து (5) மகிடிக் கூத்து

**32.** இலங்கையில் அரச நடன விழாவினை நடத்தும் நிறுவனம்

(1) கலாசார திணைக்களம் (2) இந்து கலாசார பேரவை (3) ரசிக ரஞ்சன சபா
(4) வட இலங்கைச் சங்கீத சபை (5) தேசிய இளைஞர் சேவைகள் மன்றம்

**33.** மேடையின் ஒரு பகுதியை அல்லது ஒரு காட்சியமைப்பை ஒரு நிரை ஒளி மூலம் ஒளியூட்டுவதற்குப் பயன்படும் ஒளி

(1) கீற்று ஒளி (2) பரப்பு ஒளி (3) பிரகாசமான ஒளி
(4) மங்கல் ஒளி (5) குவிந்த ஒளி

**34.** அனைத்து உயிர்களிடமும் அன்பு காட்டும் தலைவன்

(1) தயாவீரன் (2) தர்மவீரன் (3) தானவீரன் (4) யுத்த வீரன் (5) மகாவீரன்

**35.** திருக்குற்றாலக் குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவனாக விளங்குபவர்

(1) சிங்கன் (2) குளுவன் (3) கட்டியக்காரன் (4) சிவன் (5) பூசாரி

**36.** மஹரிகள் என நடனக் கலைஞர்களைக் குறிப்பிடும் சாஸ்திரிய நடனம்

(1) கதகளி (2) கதக் (3) ஒடிசி (4) மணிப்புரி (5) குச்சிப்புடி

**37.** பின்வருவனவற்றுள் 261 மொத்த அட்சரங்களைக் கொண்ட கதி, ஜாதி, தாளம் என்பவற்றைக் குறிப்பிடுக.

(1) கண்டகதி திஸ்ரஜாதி துருவ தாளம்
(2) சங்கீர்ணகதி சங்கீர்ணஜாதி துருவ தாளம்
(3) மிஸ்ரகதி மிஸ்ரஜாதி மட்டிய தாளம்
(4) சதுஸ்ரகதி சங்கீர்ணஜாதி ஜம்பை தாளம்
(5) சங்கீர்ணகதி கண்டஜாதி மட்டிய தாளம்

**38.** திருமாலினால் ஆடப்பட்ட கூத்து

(1) கொடுகொட்டி (2) பாண்டுரங்கம் (3) பாவைக்கூத்து (4) குடக்கூத்து (5) குடைக்கூத்து

**39.** திரு. டி.கே. சண்முகம் அவர்களால் 'கலைஞர்' என்ற பட்டம் வழங்கிக் கௌரவிக்கப்பட்ட நடன ஆசான்
(1) திரு. க. தொம்முக்குட்டி (2) திரு. ம. இராசரத்தினம்
(3) திரு. ப. கைலாயபிள்ளை (4) திரு. ஏரம்பு. சுப்பையா
(5) பிரம்மஶ்ரீ. ந. வீரமணி ஐயர்

**40.** திரிகாலங்களிலும் தத்தகாரத் தொனியுடன் ஆடப்படும் உருப்படி
(1) ஜதிஸ்வரம் (2) அலாரிப்பு (3) தில்லானா (4) வர்ணம் (5) அஷ்டபதி

- 41 - 45 வரையான வினாக்களுக்கு அட்டவணையைப் பயன்படுத்தி மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

| சப்த தாளங்கள் | ஜாதி பேதம் | ஜாதி பேதத்தின் மொத்த அட்சரங்கள் | கதி பேதம் | ஜாதி பேதத்தின் பின் மொத்த அட்சர எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| துருவ தாளம் | சதுஸ்ரம் | ......A...... | திஸ்ரம் | 42 |
| ரூபக தாளம் | திஸ்ரம் | 5 | மிஸ்ரம் | ......B...... |
| அட தாளம் | மிஸ்ரம் | 18 | ......C...... | 54 |
| மட்டிய தாளம் | சங்கீர்ணம் | 20 | கண்டம் | 100 |
| ......D...... | சதுஸ்ரம் | 8 | சதுஸ்ரம் | 32 |
| ஜம்பை தாளம் | கண்டம் | 8 | கண்டம் | 40 |
| ஏக தாளம் | திஸ்ரம் | ......E...... | சங்கீர்ணம் | 27 |

**41.** A இல் இடம்பெற வேண்டிய ஜாதி பேதத்தின் மொத்த அட்சரங்களின் எண்ணிக்கை
(1) 5 (2) 18 (3) 14 (4) 20 (5) 8

**42.** B இல் இடம்பெற வேண்டிய கதி பேதத்தின் பின் மொத்த அட்சர எண்ணிக்கை
(1) 5 (2) 54 (3) 8 (4) 35 (5) 20

**43.** C இல் இடம்பெற வேண்டிய கதி பேதம்
(1) திஸ்ரம் (2) சதுஸ்ரம் (3) கண்டம் (4) மிஸ்ரம் (5) சங்கீர்ணம்

**44.** D இல் இடம்பெற வேண்டிய தாளம்
(1) துருவ தாளம் (2) ரூபக தாளம் (3) அட தாளம்
(4) மட்டிய தாளம் (5) திரிபுடை தாளம்

**45.** E இல் இடம்பெற வேண்டிய ஜாதி பேதத்தின் மொத்த அட்சரங்கள்
(1) 5 (2) 3 (3) 20 (4) 18 (5) 8

**46.**



இப்படத்தில் காட்டப்பட்டுள்ள பாதநிலை ...................................... ஆகும்.
(1) ஐந்ரம்ச (2) ஏகபாதம் (3) சமபாதம்
(4) குஞ்சிதபாதம் (5) ஸ்வஸ்திக பாதம்

**47.**

| |
|---|
| தகதிகு ததிங்கிணதொம் |
| தகததிங்கிணதொம் |
| ததிங்கிணதொம் |
| கிணதொம் |

இப்படத்தில் காட்டப்பட்டுள்ள யதி அமைப்பானது .................................. ஆகும்.

(1) சம ஜதி (2) விஸம ஜதி (3) திரோதய ஜதி
(4) டமருக ஜதி (5) கோபுச்ச ஜதி

**48.** 

இப்படத்தில் காணப்படும் நடனம் ................................................. மாநிலத்திற்கு உரித்தாகும்.

(1) கேரளா (2) தமிழ் நாடு (3) ஒரிசா
(4) ஆந்திரா (5) மணிப்பூர்

**49.** 

இப்படத்தில் சுட்டப்பட்டுள்ளவர் ......................................................... என்ற நிறுவனத்தை நிறுவியவர் ஆவார்.

(1) இராமநாதன் நுண்கலைக் கழகம்
(2) சுவாமி விபுலானந்தா அழகியல் கற்கைகள் நிறுவகம்
(3) வட இலங்கைச் சங்கீதசபை
(4) திருமறைக்கலா மன்றம்
(5) ரசிக ரஞ்சனசபா

**50.** 

இப்படத்தில் காட்டப்பட்டுள்ள தோல் வாத்தியமானது ..................................... ஆகும்.

(1) ரபான் (2) பறை (3) தப்பு
(4) கெஞ்சிரா (5) உடுக்கு

* * *

# (53) நாட்டியம் (பரதம்)

## வினாத்தாள் II

**அறிவுறுத்தல்கள் :**

* **பகுதி I** இல் **முதலாம்** வினா உட்பட **இரண்டு** வினாக்களையும், **பகுதி II** இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

---

### பகுதி I

**1.** (i) நீர் கற்ற பதவர்ணத்தின் இராகம், தாளம், நாயகன், நாயகி என்பவற்றைத் தருக. (02 புள்ளிகள்)

(ii) அப்பதவர்ணத்தின் அனுபல்லவி ஒன்றிற்குரிய சஞ்சாரி பாவத்தினை விளக்குக. (04 புள்ளிகள்)

(iii) அப்பதவர்ணத்தின் அனுபல்லவிக்குரிய தீர்மானத்தினையும், மூன்றாவது சரணஸ்வரக் கோர்வைகளையும், அதன் சாகித்தியத்தினையும் தாள அங்கக் குறியீட்டுடன் எழுதுக. (14 புள்ளிகள்)

**2.** (i) கதகளி நடனத்தின் தோற்றம் பற்றித் தருக. (02 புள்ளிகள்)

(ii) கதகளி நடனத்திற்குப் பயன்படுத்தப்படும் பக்கவாத்தியங்கள் யாவை? (03 புள்ளிகள்)

(iii) கதகளி நடன வேஷ வகைகளைத் தருக. (05 புள்ளிகள்)

(iv) கதகளி நடனத்தில் இடம்பெறும் ஆட்ட முறைகளையும், கலைஞர்களையும் தருக. (05 புள்ளிகள்)

(v) கதகளி நடன வளர்ச்சி பற்றி எழுதுக. (05 புள்ளிகள்)

**3.** "தமிழ் மக்களின் பாரம்பரிய ஆடல் வடிவம் கூத்து"

(i) கூத்தின் தோற்றம் யாது? (03 புள்ளிகள்)

(ii) ஈழத்தில் காணப்படும் கூத்துக்களில் பிரதானமானவற்றைப் பிரதேச வாரியாகத் தருக. (03 புள்ளிகள்)

(iii) பின்வரும் கூத்து வகைகளை விளக்குக.

(அ) பறைமேளக் கூத்து (04 புள்ளிகள்)

(ஆ) காமன் கூத்து (04 புள்ளிகள்)

(iv) அருகிவரும் கூத்துக்கலையைப் பேணிப் பாதுகாப்பதற்கு எடுக்கப்படவேண்டிய நடவடிக்கைகளை உமது பார்வையில் விளக்குக. (06 புள்ளிகள்)

(5 + 3 + 4 + 8 = 20 புள்ளிகள்)

### பகுதி II

**4.** நடராஜர் திருவுருவத்தின் பின்வரும் தத்துவக் கருத்துக்களை விளக்குக.

(i) அவரது அங்கங்கள் குறித்து நிற்கும் தத்துவக் கருத்துக்களில் குறைந்தது பத்தினைத் தந்து விளக்குக. (10 புள்ளிகள்)

(ii) அவரது அணிகலன்கள் குறித்து நிற்கும் தத்துவக் கருத்துக்களில் குறைந்தது பத்தினைத் தந்து விளக்குக. (10 புள்ளிகள்)

**5.** கி.பி. 9 - 12 ஆம் நூற்றாண்டு வரையிலான காலப்பகுதியில் ஆடற்கலைக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவம் பற்றி விளக்குக. (20 புள்ளிகள்)

**6.** சிறுகுறிப்பு எழுதுக.

(i) பொம்மலாட்டம் (ii) ஜாவளி

(iii) ஒலி அமைப்பு (iv) ஹாஸ்யம்

(4 × 5 = 20 புள்ளிகள்)

**7.** இலங்கையில் பரதக்கலைக்கு வித்திட்ட நடனக் கலைஞரான கீதாஞ்சலி வி.கே. நல்லையா அவர்களின் வாழ்க்கை வரலாற்றினையும் கலைப்பணிகளையும் விளக்குக. (20 புள்ளிகள்)

**8.** பரதநாட்டியக் கச்சேரி ஆற்றுகைக்கு நவீன தொழில்நுட்ப சாதனங்களின் பயன்பாடு தரும் சாதக, பாதக விளைவுகளை எடுத்துக்காட்டுக்களுடன் விளக்குக. (20 புள்ளிகள்)

* * *

## (53) நாட்டியம் (பரதம்)

### செய்முறைப் பரீட்சை

1. நீர் விரும்பிய அடவு ஒன்றினை சதுஸ்ரம் தவிர்ந்த ஏனைய ஜாதி ஒன்றில் திரிகாலத்தில் ஆற்றுகை செய்க.

(5 புள்ளிகள்)

2. மண்டல பேதத்தின் உட்பிரிவுகளைச் செய்து காட்டுக. (5 புள்ளிகள்)

3. ஸ்ரோதோவக யதியை முடிவாகக் கொண்டு ஆதி தாளத்தில் நான்கு ஆவர்த்தவனங்களுக்கு ஒரு கோர்வை அமைத்து ஆடிக் காட்டுக.

(7 புள்ளிகள்)

4. மிஸ்ர அலாரிப்பினை தாளத்துடன் கொலுப்பித்து ஆற்றுகைப் படுத்துக. (8 புள்ளிகள்)

5. நீர் கற்ற கௌத்துவத்தினை ஆற்றுகைப்படுத்துக. (10 புள்ளிகள்)

6. நீர் கற்ற பதவர்ணத்தின் திரிகால தீர்மானத்தையும் அதன் சாகித்தியத்தினையும் முத்தாயிஸ்வரத்தினையும் 3ஆவது சரணஸ்வரத்தினையும் அதன் சாகித்தியத்தினையும் பாடி தாளத்துடன் கொலுப்பித்து முழுமையாக ஆற்றுகைப்படுத்துக.

(25 புள்ளிகள்)

7. நீர் கற்ற அஷ்டபதியின் கண்டிகைகளை ஆற்றுகைப்படுத்துக. (10 புள்ளிகள்)

8. நீர் கற்ற தில்லானாவில் விரும்பிய மெய்யடவு, 2ஆவது கோர்வை மற்றும் சரணப்பகுதியினைத் தாளத்துடன் கொலுப்பித்து ஆற்றுகைப்படுத்துக.

(15 புள்ளிகள்)

9. அஷ்டவித நாயகிகளில் அபிசாரிகா நாயகியின் குண இயல்புகளை சித்திரிக்கும் முகமாக அபிநயித்துக் காட்டுக.

(5 புள்ளிகள்)

10. பின்வரும் பாடல் வரிகளை பதார்த்த, வாக்கியார்த்த அபிநயத்துடன் சஞ்சாரி பாவத்தினையும் ஆற்றுகைப்படுத்துக.

இராகம் : சாரங்கா தாளம் : ஆதி

"நீல கண்டனின் கோல வடிவழகை
கால மெல்லாம் நினைத்து காத்திருந்தேன் ஸகி"

(10 புள்ளிகள்)